# மூலிகை மணி

வேலூர் மருத்துவர் :- ஆ.இரா.கண்ணப்பர்

93-வது மூலிகை விலை 50 காசு

மலர் 12 ] நள ஞு சித்திரை மீ - '76 [ இதழ் 6





மூலிகை வளமே ! நாட்டு வளம் !

# ‘மூலிகை மணி’

[தமிழ் மருத்துவத் திங்கள் இதழ்]

ஆசிரியரும் வெளியிடுபவரும்

தினமணி புகழ்

வேலூர் மருத்துவர் ஆ. இரா. கண்ணப்பர், R M P.

ஆண்டு சந்தா ரூ. 6-00 தனி இதழ் 0-50 பைசா

## சித்திரை இதழில்

(சிறப்புக் கட்டுரைகள்)



மேல் அட்டை : ஓவியர் விஸ்வநாதன்

## மூலிகை மணி சந்தா விபரம்

| உள் நாடு | மலேஷியா, சிங்கப்பூர் |
|---|---|
| 1 ஆண்டு 6-00 | கப்பல் வழி 13-20 விமான மூலம் 20-40 |
| 3 ஆண்டு 18-00 | கப்பல் வழி 39-60 விமான மூலம் 61-20 |
| ஆயுள் சந்தா ரூ. 150 | ஆயுள் சந்தா ரூ. 200 (கப்பல் மூலம்) |

தலைமை அலுவலகம் : மூலிகை மணி வேலூர் - 632001
சென்னை அலுவலக முகவரி : மூலிகை மணி, 7, அருளாம்பாள் தெரு, தி. நகர், சென்னை - 600 017.
தொலைபேசி : 445689 (சென்னை)

# அருள்வாய் முருகா

(இன்னிசைக் கவிமணி: இளங்கம்பன்)

ο

ராகம் : கல்யாணி　　　　　　　　　　தாளம் : ஆதி

பல்லவி

பாடும்பணியே அருள்வாய்---உன்றனையே
பாடும்பணியே அருள்வாய்　　　　(பா)

அநுபல்லவி

ஆடும்மயிலில் வரும் அழகரசே என்னை
ஆளும்முருகா எனச் சந்தமும் தமிழில்　　　　(பா)

சரணம்

ஓடும் அவங்களெல்லாம்
உன்னருளாலே
ஒழியும் பிறவியெல்லாம்
உன்துணையாலே
கூடும்நலங் களெல்லாம்
கூறும்உன் பெயராலே
குளிரும் மனங்க ளெல்லாம்
குமரா உன் அழகாலே　　　　(பா)



## பொன்விழா காணும் பேராசிரியர்

சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறைத் தலைவர் பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி எம்.ஏ., எம்.லிட், பி.எச்.டி., அவர்களின் 'பொன் விழா' ஆண்டு துவங்கியுள்ளது, மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும்.

எளிமையே வடிவானவர். ஆராய்ச்சித் தமிழில் எல்லையற்ற நாட்டம் கொண்டவர் 25 ஆண்டுகட்கு மேலாக ஆசிரியப் பணியும், 16க்கு மேற்பட்ட ஆய்வு நூல்களையும், 100க்கு மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகளையும் படைத்துத் தமிழாராய்ச்சிக்கு அணி செய்துள்ளார். சென்னைப் பல்கலைக் கழகத்தில் தமிழ் மருத்துவ ஆராய்ச்சி நடக்கிறது என்றால் அதற்கு முழு ஊக்கமும் ஆக்கமும் அளித்தவர் டாக்டர் சஞ்சீவி அவர்களே! பல்துறை அறிஞர். நேர்மையும் கண்டிப்பும் நிறைந்தவர்.

தமிழுணர்ச்சியும், தமிழறிவும் மட்டுமின்றி ஆங்கிலப் புலமையும் நிரம்பப் பெற்றுள்ள பேராசிரியர் அவர்கள், இன்னும் முத்துவிழா வைர விழாக்களைக் கொண்டாடிப் பல்லாண்டு வாழ்ந்து, தமிழ்ப்பணி ஆற்றிட, மூலிகைமணி வாழ்த்துகிறது.

வாழ்க சஞ்சீவி!

உ

முருகா

ஐந்துகரத்தனை யானை முகத்தனை இந்தினிளம்பிறை போலுமெயிற்றினை
நந்திமகந்தனை ஞானகொழுந்தனை புந்தியில்வைத்தடி போற்றுகின்றேனே




எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே. —(தாயுமானவர்)

மலர் 12 ] நள ௵ சித்திரை ௴ ஏப்ரல்-76 [ இதழ் 6

# தணிகைப் பெருமானின் தங்க ரத உலா!

ஆண்டு தோறும் 'மூலிகை மணி' ஆசிரியர் கண்ணப்பர் நடத்தி வரும், 'சித்ரா பௌர்ணமி' விழா இவ்வாண்டு 15, 16-4-76 ஆகிய நாட்களில் திருத்தணிகையில்வெகு சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. வாசக அன்பர்கள் பலர் திரளாக வந்திருந்து இறைவனருள பெற்றனர்.

15-4-76 அன்று காலை 11 மணிக்கு மகேச்வர வழிபாட்டுடன் விழா தொடங்கியது. அடியார்கட்கு அன்னமளித்து மகிழ்ந்தபின் மாலை 5 மணிக்கு மலைமீது தணிகைப் பெருமானுக்கு பஞ்சாமிர்த திருமுழுக்கு நடந்தேறியது. இரவு 10 மணிக்கு- புதிதாகச் செய்யப்பட்ட 'தங்க ரதத்தில் முதன் முதலாக, வெள்ளோட்டத்திற்குப் பிறகு, தணிகை வேலவனை, தங்க ரதத்தில் எழுந்தருளிவித்து, வடம் பிடித்தார் மூலிகை மணி ஆசிரியர்.

வெள்ளி வீதியென விளங்கும் மலைப்பிரகாரத்தில், பால் நிலவு பொழிய, 'பளபள' என்று ஜொலிக்கும் 21 அடி உயர தங்க ரதத்தில், வள்ளிதேவானை உடனுறைய, கருணையே வடிவான தோற்றத்தில் தணிகைப் பெருமான் எழுந்தருள, ஆசிரியரும் அன்பர்களும் முருக நாமம் கூறி, தங்க ரதத்தினை வடம் பிடித்தக் காட்சி பசுமையான, தெய்வக் காட்சியாகும்.

மறுநாள் 16-4-76 அன்றும் அடியார்க்கு அன்னமளிக்கும் விழா நடைபெற்றது. அன்றுமாலை மலைமீது வசந்த மண்டபத்தில், ஆசிரியர் எழுதிய,



தணிகை வேலன் தங்க ரதத்தில் பவனி வருதல்

'நம் நாட்டு மூலிகைகள்' 7-ம் பாகம்

புத்தகம் வெளியீட்டு விழா நடை பெற்றது. அண்மையில் இந்திய மருத்துவ இயக்குனர் பொறுப்பிலிருந்து ஓய்வு பெற்ற அறிஞர், டாகடர் பு. மு. வேணுகோபால், ஏழாம்பாகத்தை வெளியிட்டு, நூலின் சிறப்பினைப் புகழ்ந்து பேசினர். நூலின் முதல் பிரதியை, பத்ம ஸ்ரீ மதுரை. சோமசுந்தரம் பெற்றுக் கொண்டார்.

அடுத்து, இரவு 7 மணிக்கு, மதுரை சோமசுந்தரம் குழுவினரின் இசைக் கச்சேரி நடந்தது 10 மணிவரை மதுரை சோமுவின் இசையும்—பக்தியும கலந்த மதுரமான பாடல்கள், மூலிகைமணி அன்பர்களையும், ஆசிரியரையும் நெகிழ வைத்தது

இறுதியில் ஆசிரியர் நன்றி கூற திருத்தணிகை விழாவின் இருநாள் விழா இனிது முடிந்தது.

'சித்ரா பௌர்ணமி விழாவில்' கலந்து கொண்டு இரு நாட்கள் அடியவர்க்கு அன்னமளித்து அவர்கள் உண்பதால் வரும் மகிழ்ச்சியும், இறைவனேடு அவன் சிந்தனையோடு—கழிக்கும் அந்த இரண்டு நாட்களில், பெறும் இன்பத்திற்கும் இணை எது? எது?

---

வழக்கம்போல், தணிகை விழா பிரசாதமான, திருநீறும் குங்குமமும் இவ்விதழுடன் இணைத்து சந்தா அன்பர்கட்கு அனுப்பியுள்ளது இறைவன் திருமேனி பட்டுவரும் இத்திருநீற்றை எப்போதும் தூய்மையுடன் அணிந்துவர துயரம் நீங்கும். அமைதி செழிக்கும். பிரசாதம் கிடைக்கப்பெருதவர்கள் 50 காசு அஞ்சல் தலை அனுப்பிப் பெறலாம்.

---



டாக்டர் வேணுகோபால் அவர்கள் 'ஏழாம் பாகம்' வெளியிட்டு உரையாற்றுதல்



இடதுபுறம் மேலே : மதுரை சோமு குழுவினரின் கச்சேரி



ஆசிரியர் கண்ணப்பர் நன்றி தெரிவித்து உரையாற்றல்




# சீமை அகத்தி

## 193-வது மூலிகை

'கலாச்சார உறவு' காரணமாக, நம் நாகரிகம், பண்பாடு, பழக்க வழக்கங்கள் எங்ஙனம் காலந்தோறும் மாறி வருகிறதோ, அம்மாதிரி, மூலிகை இனங்களிலும், இத்தகைய மாற்றங்கள் நிகழ்கின்றன. 2000 ஆண்டுகட்கு முன்னரே, மிளகு, அகில், சந்தனம் போன்ற செடி கொடிகள் மேனாடுகளுக்குச் சென்றன. இன்றும் பல மூலிகைகள் வெளிநாடு சென்று, மாத்திரைகளாக மாறி நம்மிடம் வருகின்றன. இம்மாதிரியான கலப்புகளை வரவேற்கத் தான் வேண்டும். மேனாட்டிலிருந்து வரும் பல மூலிகைகள், நம் நாட்டு மக்களிடையே வெகு சாதாரணமாகப் புழங்கி வருவதைக் காணும்போது— 'நம் நாட்டு மூலிகையோ' என ஐயம்வரும். மூலிகை மேனாட்டிலிருந்து வந்ததாக இருக்கும், அதன்பயனை உணர்ந்து உலகுக்கு அளிப்பவர்கள் நம் நாட்டு மருத்துவர்கள் அல்லவா?

மேனாட்டில் திருமணம் செய்து கொண்டு சொந்த நாட்டுக்கு வருபவர்களைச் சிறிது காலம், ''மேனாட்டு மருமகள்'' என்று அழைப்பது இயல்பு. பிறகு மேனாட்டு மருமகளே நம நாட்டு பழக்கங்களைப் புகழ்ந்து —நாட்டு மருமகளாகி விடுவதைப் போல்—மேனாட்டு மூலிகைகளும், நம் நாட்டு மருத்துவர்கள் கைவண்ணம் பட்டு, நம் நாட்டு மூலிகைகளாகி விடுகின்றன.

இவ்விதமாக, மேனாட்டிலிருந்து வந்த மூலிகைகளில் ஒன்றுதான் 'சீமை அகத்தி' பெயரிலேயே வெளிநாட்டு முத்திரை தெரிகிறதல்லவா? அமெரிக்காவிலிருந்து உலகமெங்கும் பரவிய இம்மூலிகை, நம் நாட்டில் தான் மிகுந்த மருத்துவப் பயனைத் தரும் மூலிகையாகிறது.

## பொது விவரம்

அகத்தி இனத்தைச் சேர்ந்த இது, கொன்றை மர சாதியைச் சேர்ந்தது, குத்துபரமாக வளர்வது. சீமை அகத்திப்பூ, கவர்ச்சி நிறைந்த பூ ஆகும். தடித்த இலைகளில் - 1 முதல் 2 அடி நீளமுள்ள கூட்டு இலைகள் காணும். இலைக காம்பு மெல்லியது. அரும்புகளை மஞ்சள் நிறக் காம்பிலைகள் மூடி இருக்கும். பூ கொத்தாக மலரும். காய் நீண்டது. காயின் மேலும் கீழும் நடுக்கோட்டில் அகன்ற சிறகுகள் இருக்கும். கனி வெடிக்கும். விதைகள் 50க்கு மேல் இருக்கும். நிழல் தரும் மரம். எங்கும் வளரக் கூடியது. தென் மாவட்டங்களில் 'வண்டுக் கொல்லி' என்றழைப்பர்.

## மருத்துவ குணம்

இலை புளிப்புச் சுவையுடையது. இலை, வேர், பூ, ஆகிய மூன்றும் மருத்துவப் பயனுகிறது. மலத்தை வெளியேற்றும் திறன் உடையது. நுண்கிருமிகளை அழிக்கும் சக்தியுடையது. வாதத்தை குறைக்கும். தோலின் மேல் வரும் அரிப்பை நீக்கும். இருமலுக்கும், காசத்திற்கும் உகந்தது தோற்படைக்குச் சரியான மருந்து

## முறை விபரம்

### தோல் படைக்கு

கக்கூஸ், சோப், டெரிலின் துணிகள் காரணமாக தோலின்மேல் வரும் படைகள் குணமாக இதன் இலையை எலுமிச்சம் பழச்சாறு விட்டு அரைத்து காலையில பற்று போட்டு ½ மணி நேரம் கழித்து குளிக்கவும் இவ்விதம் 10 முதல் 20 நாட்கள் விடாமல் செய்து வர குணமாகும். Ringworm எனப்படும் 'தோல் படைக்கு' குழி குணம் அளிக்கவல்ல மூலிகை இது. அதனுல் தான் இதன் ஆங்கிலப் பெயர், 'Ringworm shurb' என்று அமைந்துள்ளது போலும்.

### எக்சிமா என்னும் சொறிப்படை நீங்க

அடிக்கடி வந்து தொலலைபடுத்தும் இந்நோயை அறவே நீக்க, சீமை அகத்தியின் இலை பட்டை, பூ ஆகியவற்றை சமஅளவு எடுத்து, இடித்து, சோதது கஷாயம செய்து சொறிப் படையின் மீது கழுவி வர குணமாகும்.

### மேகப்புண், நஞ்சுக்கடிக்கு

இலையை மட்டும் இடித்து அத்துடன் 6 மிளகு சேர்த்து கஷாயமிட்டுக் குடித்துவர, பேதியாகும. அதன்பின் மேகப்புண, நஞ்சுக்கடி ஆகியன குணமாகும். -

## வாய்ப்புண் நீங்க

இலையுடன் சம அளவு பூ, பட்டை ஆகியன சேர்த்து கொதிக்க வைத்து ஆற்ய நீரை, வாய்ப்புண் வந்தபோது கொப்புளிக்க, அவை ஆறும். புண்களில் உள்ள நுண்கிருமிகளைக் கொல்லும் ஆற்றல் உடையதால், இதனைப் புண்களைக் கழுவுவதற்கும் பயன்படுத்தலாம்.

## கப இருமல் - மேல்மூச்சு நீங்க

காசம் தொடர்பாக வரும், கப இருமல் மேல்மூச்சு ஆகியன குணமாக, இதன்இலை, பூவை, இஞ்சி, மிளகு சேர்த்துக் கஷாயமிட்டுகொடுக்க குணமாகும்.

## எச்சில் தழும்பு, படர்தாமரை, ஆகியவற்றிற்கு

இதன் இலைச்சாறு 1 லிட்டர் எடுத்து அதில் 2 லிட்டர் தேங்காய் எண்ணெய் விட்டுக் காய்ச்சி, அதில் 500 கிராம் தேன்மெழுது போட்டு பதத்தில் இறக்கி, அதனை படர் தாமரை, எச்சில் தழும்புகள் மேல் பூசி வர அவை குணமாகும்.

கொடிய சர்ம நோய்களைத் தீர்க்கும் எமது தயாரிப்பான 'மகா மூலிகை எண்ணெய்' தயாரிப்பில் சீமை அகத்திக்குச் சிறப்பான இடம் உள்ளது.

'வண்டு கொல்லி' என்றபெயர் தென் மாவட்டங்களில் இதற்கு உள்ளதால, வண்டு, பூரான் போன்ற நஞ்சுக் கடிகளை குணமாக்கும் ஆற்றல் இதன் இலைக்கு உள்ளதாகத் தெரிகிறது. இதன் இலையையும் அருகம்புல் 1 பிடி, மிளகு 6 சேர்த்து கஷாயம் செய்து சாப்பிட வண்டுகடி விடம் போகும்.

'தோலின் நோய்' என்ருல் அதனை நீக்கும் உன்னத மூலிகை 'சீமை-அகத்தி' என்பதை அனுபவபூர்வமாக உணர்ந்து — உறுதியாக நம்பலாம்.

# நோயும், மருந்தும்

வினு : ஐயா, நான் சின்ன வயதிலிருந்தே கஷ்டத்தைத் தவிர வேறு எதுவும் கண்டவனில்லே. ஆண்டவனருளால் ஒரு பெண் குழந்தையும் ஒரு பையனுமே இருக்கிருர்கள். அவர்களிருவரும் எங்கள் கஷ்டமறிந்து நன்ருக படித்து இருக்கிருர்கள். இருப்பினும் எனக்கு சுமார் 6 மாதமாக மன அமைதி இன்மையும், பயமும், நெஞ்சு வலியும் உடலில் பல வித தொல்லேகளால் இருந்து வருகிறது. எனவே கருணை கூர்ந்து எனக்கு ஒரு சிகிச்சை கூறவும்.

விடை : அன்புடையீர், மனக்கவலேயால் நெஞ்சுவலி மிகும். எனவே கவலே வேண்டாம். முசுமுசுக்கை, தூதுவளே, கீரையை தினமும் 40 நாள் சமையலுடன் சேர்க்கவும். தினமும் காலே, மாலே சண்முக கவசம் முருகனே நினேத்து பாராயணம் செய்து வரவும். உமது துன்பமெல்லாம் நீங்கிவிடும்.

வினு : டாக்டர் கண்ணப்பர் அவர்களுக்கு திருகூர் V. குப்புசாமி எழுதியது. தங்கள் மூலிகை மணி தினமணி சுடரில் 2, 3 வருடத்திற்கு முன் தெரிவித்திருந்தீர்கள் ஆலங்கண்ணு சல்லிவேர் அராமல் எடுத்து புடம் வைத்து திருநீறு செய்து கொள்ளலாம். அதற்கு நட்சத்திரம் திதி மறந்துபோய் விட்டது. அது எந்த நட்சத்திரம். திதி என தெரியபடுத்தவும்.

விடை ; அன்புடையீர், ஆலங்கன்று விபூதியை தசமி திதி, திருவாதிரை நட்சத்திரம் அன்று எடுத்து புடமிட்டு விபூதியாக செய்து வைத்துக் கொள்வது உத்தமம். நன்மை பயக்கும்.

வினு : எனக்கு வயது 24. இன்னும் திருமணமாகவில்லே. இந்த வயதிலேயே கண்ணுடி போட வேண்டியதிருக்கிறதே என மனவருத்தமாய் இருக்கிறது. எங்கள் குடும்பத்தில் யாரும் கண்ணுடி அணிவதில்லே. நான் தான் மூத்தவன். கண்ணுடி போடுவதற்கு முன் அடிக்கடி தலேவலி வரும். கீழே

குனிந்தால் தலையை வலிக்கும். முன்பு வாந்தியும் வரும். அந்த ஒரு நாள் முழுவதும் தலையை வலிக்கும். மாத்திரை சாப்பிட்டால் உடனே நின்று விடும். கபாலநீர் இருப்பதாக சொன்னார்கள். முன்பு நல்லெண்ணெய் தேய்த்துக் குளிப்பது வழக்கம். ஒரு நண்பரின் ஆலோசனைப்படி ஒரு மாதமாக காய்ச்சிய வேப்பெண்ணெ தேய்த்து குளிக்கிறேன். உங்களுடைய கடிதத்திற்கு காத்திருக்கிறேன்.

விடை : கண் கோளாறு சம்பந்தமாக நீங்கள் கவலைப்பட வேண்டாம். தலைவலிக்கும் மற்றும் நீங்கள் குறிப்பிட்ட நோய்குறிகள் எல்லாம் எமது நேத்திரப் பூண்டு தைலம் குணமாக்கும். 2-துளி காலை நேரம் கண்களில் விட்டுவர பார்வை கோளாறு, தலைவலி நீங்கும். கண்ணாடியும் அணிய வேண்டியதில்லை. Rs 22.00 M. O. அனுப்பி பார்சல் வழி பெறவும்.

வினா: என் மகளுக்கு 13 வயது நடைபெறுகிறது. சென்ற ஆண்டு பள்ளியில் போர்டில் உள்ள எழுத்துக்கள் தெரியவில்லை என்று கூறினாள். அதனால் பெங்களூரில் டாக்டர் ஒருவரிடம் சிகிச்சை பெற்றோம். பலனில்லை. பின் வேலூரில் C. M. C.ல் காண்பித்தோம். டாக்டர் என் மகளுக்கு "CARNIOPHARUNCIOMA" என்ற வியாதி உள்ளது என்று ஆராய்ந்து அறுவை சிகிச்சை செய்தார். வலதுகண் பார்வை முற்றிலும் இழந்து விட்டது. இடது கண் பார்வை இழக்காமலிருக்க உதவும் என்று கூறினர். அறுவை சிகிச்சை 5-9-1975ல் நடந்தது. பின் 'Radiation Treatment' ஒரு மாதம் கொடுத்தனர். இடையில் நாங்கள் 40, 50 நாட்களுக்கு ஒரு தடவை எங்கள் சொந்த ஊர் சேலத்திலிருந்து வந்து மருந்தும், மாத்திரைகளையும் பெற்று திரும்பினோம். அறுவை சிகிச்சை நடந்த நாளிலிருந்து இதுநாள் வரையிலும் குழந்தைக்கு (1) சோர்வு அதிகம், (2) உடல் தடிப்பாக உள்ளது. (3) இரண்டு கன்னங்களிலும் ஊதி சற்று பெருத்துள்ளன. (4) வீட்டின் வேலை செய்ய முடிவதில்லை. (5) இருமல் கொஞ்சம் உள்ளது. (6) தூக்கமதிகம். பகலிலும் அதிகம். (7) இடது கண் பார்வை கடந்த ஒரு மாதத்திற்குள் 1/4 பாகம் குறைந்து

விட்டது. ஒரு கண் இழந்தாலும் மற்ருெரு கண்ணினுல் சமாளித்துக் கொள்ளலாம் என நினைத்தான் ஆண்டவனே! இன்று மற்ருெரு கண் பார்வையிலும் ¼ பாகம் இழந்து விட்டது. இந்த நரம்பு சம்பந்தமான வியாதியை தங்களால் நீக்க இயலும் என்று நம்பி தங்களுக்கு இக்கடிதம் வரைகின்றேன். தங்களைப் பற்றி தவத்திரு, கிருபானந்த வாரியார் சுவாமிகள் மேடைகளில் கூறியதை நினைவு கூர்ந்து இன்று தங்கள் இல்லம் சென்றேன். முகவரி கிடைத்தது. முகவரி கிடைத்தது போன்று என் மகளுக்கு கண்கள் பார்வையுள்ள கண்கள் கொண்ட முகம் கிடைக்க எல்லாம் வல்ல முருகப் பெருமான் திருவுள்ளத்தை தங்கள் கடிதம் மூலம் காண பேரவா கொண்டுள்ளேன்.

விடை: அன்புடையீர், உங்கள் சோகமான கடிதம் கண்டோம். அறுவை சிகிச்சைக்கு முன்பு வலது கண் பார்வை இழந்து விட்டது. பின்பு இடது கண்ணும் பார்வை இழந்து விட்டது 1/4 பாகம். நீங்கள் முதலில் ஆங்கில மருத்துவத்தில் சென்று பலவித சிகிச்சை செய்து கொண்டீர்கள். நீங்கள் எழுதியதுபோல் ஆண்டவனே என்று அவன் பேரில் முழு நம்பிக்கையுடன் நம் நாட்டு முறையை முதலில் நாடி இருக்கலாம். ''கண் கெட்ட பிறகு சூரிய 'நமஸ்காரம்'' என்ற பழமொழியை போல தங்கள் குழந்தையின் கண்ணை கெடுத்து விட்டீர்கள். இப்போது தமிழ் மருத்துவம் பார்க்க ஆசை படுகிறீர்கள். பரவாயில்லை! எமது நேத்திரப் பூண்டு தைலம் நல்லது செய்யுமே தவிர, இதுவரையில் யாருக்கும் கெடுதல் செய்ததில்லை. முழு நம்பிக்கையுடன் 2 துளி கண்களில் விட்டு பாருங்கள் குணம் கிடைத்தால் எமது முருகனை நினைத்து பிரார்த்தனை கூறுங்கள். அவன் அருள் புரியட்டும்.

வினு: என் வயது 28. திருமணமானவன். எனக்கு வலதுபுற விதை சற்று உயர்ந்தும் இடதுபுற விதை தாழ்ந்தும் உள்ளது. வலதுபுற விதை பாகத்தில் லேசாக வலி இருந்து கொண்டு உள்ளது. வலதுபுற விதை பாகத்தில் எடுக்கின்ற வலி, அடிவயிற்றின் வலப்பாகம்வரை உள்ளது. இருமும் போது 2 விதையும் சமமாகத் தான் எழுப்புகின்றது. தங்களை காண நேரில் வர வசதியில்லை. இதை போக்க என்ன பற்பம் அல்லது என்ன சூரணம் சாப்பிட வேண்டுமென்று தயது செய்து கூறவும்.

விடை : அன்புள்ள தம்பி ! இது அண்டவாதமல்ல ! பயப்பட வேண்டாம். ஒரு விதை எறியும் ஒரு விதை இறங்கியும் சிலருக்கு காண் பது வாத உடம்பிற்குள்ள இயற்கை. உத்தாமணி அல்லது கருஞ் செம்பை இலையை விளக்கெண்ணெயில் வதக்கி இளம் சூடாக ஒரு துணி யில் வைத்து தினம் 1 வாரம் ஒத்தடம் கொடுக்க வலி எல்லாம் நீங்கி விடும். உள்ளுக்கு எதும் தேவையில்லை ! உள்ளுக்குச் சாப்பிட வேணு மானால் நேரில் வரவும்.

வினா : ஐயா, தங்கள் பத்திரிகையைத் தொடர்ச்சி யாகப் பல ஆண்டுகளாகப் பெற்று படித்து பலனடைந்தவர் களில் யானும் ஒருவன். குறிப்பாக வேளாண்மை பட்டதாரி யான யான் மக்களுக்கு யோசனை கூறுங்காலத்து இயற்கை தரும் உணவு வகைகளை குறிப்பாக கீரை வகைகளை நமது உணவு வகையில் சேர்க்க நோயற்ற வாழ்வு வாழலாம் என்று போதித்து வருபவன். அதற்கு தங்கள் மூலிகைமணி பெரி தும் உதவிகரமாக இருந்தது ஐயா ! கீரைகளை பொதுவாக காலையில் உட்கொண்டால் தான் முழுப்பயனையும் பெறலாம் என்று மதியம் சாப்பிட மத்திமம் எனவும், இரவில் சாப்பிட லாகாது என்று கூறுகின்றார்கள். இது பற்றிய தங்கள் கருத் துக்களை கூற வேண்டுகிறேன். இதற்கு விஞ்ஞான விளக்கம் கொடுத்தால் நல்லது.

விடை : தங்கள் அன்புக்கு எமது நன்றியும், மகிழ்ச்சியும் இது மாதிரி பொது நல தொண்டில் ஈடுபடுவோர் மிகவும் குறைவு. உமது தொண்டுள்ளம் வளரட்டும் ! கீரைகளுக்கு எப்படி விஞ்ஞான விளக்கம் தருவது. பொதுவாக கீரைகளை பகலில் உண்ணுவது தான் முறை. கீரையினங்கள் மனித இனங்களைப் போல் உண்ணவும் உறங்கவும் செய் யும். அதனால் அவைகளை உறங்கும் போது (மாலை, இரவு நேரம்) எடுத்து பயன் படுத்தினால் நமக்கும் உறக்கம் வரும். எனவே நமது முன் னோர்கள் காலையில் எடுத்து பயன்படுத்தினார்கள். நூற்றாண்டுகள் நல் வாழ்வு நடத்தினார்கள், எனவே நாமும் கீரையினங்களை பகல் உணவில் பயன்படுத்தி நலம் பெறுவோமாக !

வினா : ஐயா, தாங்கள் வெளியிட்டுள்ள 'மூலிகை'யைப் பற்றியுள்ள நூல் வாங்கிப் படித்தேன். அது மிக்க பயனுள்ள தாக இருக்கின்றது. நான் வேறொரு நூலில் சில மூலிகை

களைப் பற்றி படித்தேன். அந்த புத்தகத்தில் ஒரு மூலிகையின் பெயர், 'ஸ்ரீதேவி' என்று கூறப்பட்டிருக்கிறது. ஆகையால் 'ஸ்ரீதேவி' என்கிற மூலிகைக்கு வேறு பெயர் உண்டா? இந்த மூலிகை எங்கு கிடைக்கும்? உங்களால் இந்த மூலிகையை தபாலில் அனுப்ப முடியுமா?

விடை: ஸ்ரீதேவி என்ற மூலிகைக்கு மற்றொரு பெயர் 'நெய் செட்டிக்கீரை' சீதேவி செங்கழுநீர் என்பது பெயர். குறிப்பாக மழைக் காலங்களில் கிடைக்கும். எங்களால் இதனை தபாலில் அனுப்ப முடியாது ஏனென்றால் இது சித்திரை மாதமாதலால் இந்த மூலிகை கிடைப்பதரிது.

வினா: ஐயன்மீர், எனக்கு மிகவும் விருப்பமான பொருள் சுருள்முடி ஆனால் எனக்கு சாதாரணமான முடி தான் பெற்றுள்ளேன். எனது பேரவாவைப் பூர்த்தி செய்ய முடியை சுருள் சுருளாக்கி மாற்ற தங்கள் ஆலோசனை நல்கி, என்னை உய்விக்கச் செய்யுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

விடை: ஆண்டவன் கொடுத்தது சாதாரண முடி. அதை எப்படி சுருள் முடியாக மாற்ற முடியும். இயற்கைக்கு விரோதம் சுருள் முடியாக்க வேறு பல கெடுதல் விளையும். எனவே உள்ளதைக் கொண்டு திருப்தி அடைக.

வினா: எனது பேத்தி வயது 10. தலையில் நிறைய பேனும், ஊரலும் மட்டும் இருக்கிறது. தங்களுடைய மார்கழி மாத இதழில் அவுரித் தைலம், வல்லாரைத் தைலம், மூலிகை ஸ்னானப் பொடி இவைகளை உபயோகித்தால் பேன் ஒழியும் என்று குறிப்பிட்டிருக்கிறீர்கள். எனது பேத்திக்கு எந்த தைலம் உபயோகிக்கலாம்? என்பதனைக் கூறுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

விடை: ஐயா, உங்கள் பேத்திக்கு மேற்கண்ட மூன்று முறைகளில் ஏதையும் பயன் படுத்தலாம். அவுரித் தைலம் சிறந்தது. பொதுவாக தினமும் தலைக்கு தடவி வர, தேங்காயெண்ணெயில் 2 சிட்டிகை மூக்கு பொடி கலந்து தடவிவர பேன்கள் யாவும் ஒழியும்.

வினா: எனக்கு வயது 20. என் முகத்தில் முகப்பரு வந்து மறைந்து விட்டது. அதனல் புள்ளி, புள்ளியென கருப்பு

வடுக்களை உண்டாக்கி விட்டது. மேலும் முகப்பருக்கள் தோன்றுகின்றன. இதனால் முகம் விகாரமாகி விடுமோ என்று நான் அஞ்சுகிறேன். மற்றவர்களோடு சகஜமாக உரையாடு வதற்கும் கஷ்டமாக உள்ளது. தன்னம்பிக்கையை தகர்தெறி யும் இந்த வடுக்களையும் பருக்களையும் போக்குவதறியாது தவிக் கிறேன். என்னை தன்னம்பிக்கை உள்ளவனாக மாற்றுவது உங்கள் கையில் தான் உள்ளது.

விடை: தம்பி, முகத்தில் வடுக்கள், பருக்கள் தோன்றுவது மன தில் விகார எண்ணங்களை நினையாதே. மேலும் வாலிப வயதில் பாலு ணர்ச்சியாலும் முகத்தில் பருக்கள் வரும். அதனைக் கிள்ளக் கூடாது. தினம் அம்மாம் பச்சரிசி கீரையை பருப்புடன் சேர்த்து சாப்பிட முக வடுக்கள், பருக்கள் நீங்கும்.

வினா: பச்சிலைகளை பறிப்பதாய் இருந்தால் அவைகள் வீரியமாய் இருக்க கடலோரத்திலிருந்து எவ்வளவு தூரத்தில் இருக்க வேண்டும். அப்போது மூலிகைகள் வீரியம் கெடாமல் இருக்குமா?

விடை: சுமார் 50 மைல் தூரத்தில் கடலுக்கு அப்பால் விளையும் மூலிகைகள் வீரியம் கெடாமல் இருக்கும்.

வினா: எனக்கு சாப்பிட்டபின் அஜீரணமாகி மந்திப் பானவுடன் நீர்த்தாகயிலிருந்து தொண்டை நரம்பு வரை வலி ஏற்படுகிறது. அத்துடன் விக்கலும் உண்டாகின்றது. நெஞ்சுவலி அதற்கு மேல் வாந்தியும் ஏற்படுகிறது. ஆஸ்பத் திரியில் ஊசி போட்டு மாத்திரைகள் கொடுத்தார்கள் கொஞ்ச நாள் சுமாராக இருந்தது. மறுபடியும் அதே மாதிரி ஏற்படு கிறது. தங்களுடைய விளம்பரத்தை பத்திரிகையில் பார்த் தேன். இதற்கு என்ன பரிகாரம் என்பதனை தயது செய்து கூறவும்.

விடை: ஐயா. வயிற்று கோளாறு சம்பந்தமான எந்த நோய்க் கும் பொடுதலை கீரையை சமையல் செய்து பகலில் சாப்பிடவும். அஜீ ரணம் அதிகமாக இருந்தால் மிளகுடன் சேர்த்து அரைத்து துவையலாக்கி சமையலில் சேர்க்க வயிற்று கோளாறு யாவும் நீங்கும்.

# பழமொழி மருத்துவம்

[ க. வேங்கடேசன், சென்னைப் பல்கலைக் கழகம் ]

( சென்ற இதழின் தொடர்ச்சி )

கூறுமிப்பழமொழிகள் வழக்கில் இன்றுமுண்டு. மூலிகைகளின் பயனை அறிவிப்பதிலும் முன்னோர் ஆற்றிய பணி அளப்பரிய பணியாகும்.

## 4 பழமொழிகளில் மருத்துவன்

'வாதி மகன் வைத்தியன்'

'வாதம் கெட்டு வைத்தியன் ஆனான்'

என்னும் இவ்விரு பழமொழிக்கும், மருத்துவன் தகுதியைக் கூறுகின்றன. இதன் உட்பொருள் இரசவாதம் (Alchemy) செய்யத் தெரிந்தவனே வைத்தியனாக முடியும், என்பதாகும். இரசவாதம் செய்யத் தெரிந்தவன் நூற்றுக்கணக்கான, மூலிகைகள் உலோகங்கள், தாது பொருட்களை பற்றிய அறிவை பெற்று விடுகிறான். எனவே, அவனுக்கு மருத்துவ அறிவு (இரசவாதம் மூலம்) தானே வருகிறது. பலருக்கு இரசவாதத்தில் தோல்வி ஏற்பட்டாலும், இறுதியில் தான் அறிந்த மூலிகைகளைக் கொண்டே மருத்துவம் செய்ய முடியும் என்ற திட நம்பிக்கை ஏற்படும். எனவே தான் 'வாதம்' கெட்டு வைத்தியன் ஆனான்' என்ற பழமொழி தோன்றியது. இரச வாதத்திற்கும், மருத்துவத்திற்கும் நெருங்கிய தொடர்புண்டு என்பதையும், மருத்துவனுக்கு இரசவாதம் பற்றிய அறிவு கட்டாயம் இருக்கவேண்டும் என்ற கருத்தும், மற்ற மருத்துவ முறை அறிஞர்கட்கும் உடன்பாடுடையதாகும். பாரசீலஸ் என்னும் கிரேக்க மருத்துவ அறிஞன், '' மருத்துவம் பயிலும் ஒருவன் இரசவாத அறிவையும் பெற்றிருத்தல் வேண்டும்' என்று கூறுகிறார். தமிழ் நாட்டுப் பழமொழி கூறும் 'மருத்துவ இலக்கணம்' மற்ற மருத்துவ முறைகளிலும் எதிரொலிக்கப் படுகிறது.

இது காலம் கண்டவாறு. தமிழ் நாட்டுப் பழமொழிகளை தொகுத்து தற்கால அறிவியல் முறையில் அணுகி ஆய்வு செய்வோமேயானால், கொடிய நோய்களுக்குரிய உயர்ந்த மருந்துகளைத் தமிழகம் உலகுக்கு அளிக்க இயலும் என்றும், அவ்வளவு அரிய செய்திகள் தமிழ்நாட்டுப் பழமொழிகளில் உள்ளன என்றும் அறியலாம்.

# பொருள்களின்

# குண விளக்கம்

[ சென்ற மாதத் தொடர்ச்சி]

## முலைப்பால் பொதுக்குணம்

தன்னியமென் ரேதிச் சருவதோஷங்களும் போம்
உன்னியதாப மொழியுங் காண்-சந்நியொடு
வாதசுரம் பித்தசுரம் வன்கபச் சுரந்தணியுங்
கொதில் வலிமையுண்டாங் கூறு.

## இதுவுமது

இருந்தோஷம் போக்கு மிகற்கிரிச்சந் தீர்க்கும்
அருந்து மருந்தி னனுபானம் பொருந்தும்
அஞ்சனத்திற் காகு மனல்வறட்சி நீக்கிவிடும்
பஞ்சினடி மாதர் முலைப்பால்

(இ-ள்.) முலைப்பால் ஏழு வகைத் தோஷங்கள் வெப்பம் சன்னிபாதம் வாதபித்த சுபசுரங்கள் திரிதோஷம் வாதகிரிச்சரம் நாவறட்சி ஆகிய இவைகளை விலக்கி வன்மையைத் தரும் ஔஷத அனுபானத்திற்கும் கலிகத்திற்கும் ஆகுமென்க தன்னியம் என்பது முலைப்பால்.

## கருமை செம்மைநிற மாதர்களின் முலைப்பாற்குணம்

கரியநிற மாதர் கலசமுலைக் கீரம்
அரியவிழிக் காமருந்திற் கா்கா- திருகிலை த்துள்
நோயணுகாச் செய்ய நுடக்கிடையார் தம்முலைப்பால்
தீயமுத் தோஷம்போக்குஞ் சேர்

(இ-ள்) கரியநிற மாதர் முலைப்பால் கண் வைத்தியங்களுக்கேயன்றி ஔஷதங்களுக்குபயோகமாகாது வியாதியில்லாத செம்மை நிற மாதர் முலைப்பால் வாதாதி முத்தோஷங்களைப் போக்கும்.

## பரத்தையர் முலைப்பாற் குணம்

பரத்தையர் முலைப்பாற்குப் பாரமுத் தோஷங்கள்
உரத்து வரும்வாத-முண்டர்கும். இரத்தச்

சொறிகிரந்தி புண்ணுந் தொடர்கழ ேனெய்சேருங்
குறியறிந்து நீக்கிக் கொடு.

(இ-ள்.) வேசையர் முலைப்பாலால் திரிதோஷங்கள் வாதரோகம் இரத்தச்சொறி கிரந்தி விரணம் கழல்வாதம் இவையுண்டாமென்க.

## பசுவின்பாற் பொதுக்குணம்

பாலர் கிழவர் பழஞ்சுரந்தோர் புண்ணுளி
சூலையர் மேகத்தோர் துற்பலத்தோற் எலுமிவர்
எல்லார்க்கு மாகு மிளைத்தவர்க்குஞ் சாதகமாம்
நல்லாய் பசுவின் பால் நாட்டு.

(இ-ள்.) பசுவின் பாலானது பாலருக்கும் விருத்தருக்கும் பழைய சுரமும் விரணம் சூலை பிரசுமகந் துர்ப்பலம் அதிசுஷகரோகம் ஆகிய இவைகளை யுடையவர்களுக்கும் ஆகுமென்க.

## வெண்மை செம்மை கருமை கபிலை என்னும் இன்னிற முள்ள பசுக்களின் பாற்குணம்

வெண்பசுவின் பால்போக்கும் பித்தத்தை மெய்சிவந்த
வண்பசுவின் பால்போக்கும் வாதத்தைக்- கண்சிறந்த
காராவின் பால்போக்கு மையங் கபிலைப்பால்
ஆரமிர்தாந் தோஷ மறுக்கும்.

(இ-ள்.) வெண்மை நிறப்பசுவின்பால் பித்த கோபத்தையும், செம்மைநிறப் பசுவின்பால் வாத தோஷத்தையும் கருமைநிறப் பசுவின் பால் கபரோகத்தையும், கபிலநிறப் பசுவின்பால் திரிதோஷத்தையும் போக்கும். கபிலை என்பது, கருமைகலந்த பொன்னிறமாம் என்க.

## காராம் பசுவின் பாற்குணம்

கண்ணோ யகற்றுங் கயரோகத் தான்போக்கு
மண்ணுலுள்ள பால்தோஷம் மாற்றுங்காண்-பெண்ணே
இரத்தபித்தம் போக்கு மிராச வசியங்
கறுத்தபசும் பால்தனைக் காண்.

(இ-ள்.) பெண்ணே! காராம் பசும்பால் விழிப்பிணிக்ஷயம் மற்ற பாலின் தோஷங்கள் ரத்தபித்த ரோகம் இவைகளை நீக்கும் வசியமாம்

## நாரைமான் கபிலை என்னும் பசுக்களின் பாற்குணம்

நாரைப் பசுவின்பால் நாளுமுய ேநாயகற்று
மாரைநிறப் பசும்பால் வாய்த்திடினோ-வேரையுறு

முப்பிணியும் போகு மொழிகபிலே யின்பாலுக்
கெப்பிணியும் போமே யிறங்கி.

(இ-ள்) நாரைப் பசும்பால் முயல்வலி தீர்க்கும், கபிலைப்பசும்பாலால் திரிதோஷமும் பலபிணியும் தீருமென்க.

## கொம்பசையும் பசுவின் பாற்குணம்

கொம்பசையு மாப்பாலோ கூறுபித்தம் போக்கிவிடுந்
தம்பவா தத்தைத் தருவிக்கும்-வம்புமுலை
மானேகேள் விந்துவை வளர்ப்பிக்குங் 'கபத்தைத்
தானே யெழுப்புமெனச் சாற்று.

(இ-ள்.) கச்சணிந்த தனங்களையுடைய பெண்ணே! அசைகின்ற கொம்பையுடைய பசுவின்பால் பித்தரோகத்தை நீக்கும், தனுர்த்தம்பவாதம் சுக்கிலதாது கபநோய் இவைகளை விலக்கும்.

## மூன்றுமீற்று நான்காமீற்று பசுக்களின் பாற்குணம்

மூன்று மீற்றின்பான் முதிர்கபத்தைப் போக்கிவிடும்
ஏன்ற நாலாமீற் றென்னும்பாலுங்-கூன்றுதிரி
தோட மகலுஞ் சுகமுண்டிவ் வாப்பாற்சந்
தோட மெவர்க்குமுண்டாக் கும்.

(இ-ள்) மூன்றுமீற்றுப் பசுவின் பால் நீடித்த சிலேஷ்மநோயையும் நான்காம் ஈற்றுப்பசுவின் பால் வாதாதி மூன்று தோஷங்களையும் நீக்கும். சரீரசவுக்கியமும் மகிழ்ச்சியும் உண்டாமென்க.

## ஆகாப் பசுவின் பாற்குணம்-விருத்தம்

விஞ்சுவரணை தாராநோய் மிகுத்துச்சுழலல் வெண்புள்ளி
துஞ்சியலைந்து மலமருந்தல் சுடுகாடேசி யெலும்புணாவிவ்
வஞ்சுவகையி னுவின்மா லாகாதனு !கிரதிதோஷம்
நெஞ்சிலடையுங் கயநோயா னிறைந்தவயதுங் குறைந்திடுமே

(இ-ள்.) ஆகாப் பசுவின்பால் ஐவகைப்படும், அவையாவன அரணைநோய் தாராநோய் மிகவுஞ் சுரறுதலோடு வெண்மைபுள்ளி தூங்கித்திரிந்து மலம் அருந்தல் சுடுகாட்டெலும்பு உண்ணல் ஆகிய இவைகளையுடைய பசுக்களின் பாலாம், இவை சேருமாகில் வாதாதி மூன்று தோஷங்களும் மார்பிற்சேர்ந்து க்ஷயத்தை விளைவிப்பதும் ஆயுளைக் குறைப்பதுமா மென்க-

## பகற்பசுவின் பாற்குணம்-வெண்பா

பகற்பால் சிசுக்கட்குப் பக்குவ மென்ருலும்
விகற்பமுடன் பருக மெய்யே-யெதற்குமிகத்
தீதடரச் செய்யுமித்தாற் சேராதுட் காய்ச்சலனல்
தாதுவிழும் பூங்குழலே சாற்று

(இ-ள்.) மகரந்தங்களுதிர மலரணிந்த அழகிய கூந்தலே யுடையாளே! பகற்பசுவின்பால் குழந்தைகளுக்குப் பக்குவமா மென்ருலும் பற்பல கபநோயையும் தாம்பூலம் புளிப்பு முதலிய சேருமிடத்துக் கெடுதியையும் செய்யும், உட்சூட்டையும் வெப்பத்தையும் நீக்குமென்க.

## இராப்பசுவின் பாற்குணம்

பகற்பசும் பால்காய்ச் சிப்பருகி னழலும்
விகற்பமு மீளேயு கிராவாம்-புகல்பித்த
வேகமும்போ மேனியெல்லா மேயிடுந் தாதுவுமாம்
போகமு முண்டாகும் புகல்

## இதுவுமது

இரவின்பால் கண்ணி லெழுபிணி போக்கும்பின்
பரவியநோயும் போக்கும் பாரில்-விரகமுற்ருர்க்
கத்தியம் பன்னவிழி யாயிழையே யாவருக்கும்
பத்தியமா மென்றைக்கும் பார்.

(இ-ள்) அயிலேநிகர்த்த கண்ணேயும் ஆராய்ந்திழைக்கப்பெற்ற ஆபரணத்தையு முடைய பெண்ணே! பகலில்சுரந்து இரவில் கரக்கின்ற பாலே விதிப்படி காச்சியருந்த தேக அழற்சி கபரோகம் சுவாசம் பித்த கோபம் நேத்திரவியாதி விந்துவின் கெடுதியா லனுசரித்த சிற்சில ரோகங்கள் ஆகிய இவை நீங்கும். தேகத்தில் மினுமினுப்பும் சுக்கிலப் பெருக்கமும் மாதர்மேல் விருப்பமுண்டாகும். இது பத்தியத்திற் குதவுமென்க. பகல்முழுதுஞ் சுரந்திருந்து இரவில் சுரப்பது பகற்பால்.

[ தொடரும் ]

# தமிழ்த் திருமணம்

[ கி. இராமலிங்கனார், எம்.ஏ. ]

## செய்முறையும் - விளக்கமும்

### i மண அறை அமைப்பு

1. மணப்பந்தர்
2. பந்தர்க்கால்
3. மணமனை
4. நிறை குடங்கள்
5. குடவிளக்கு
6. முளைத்த கூலங்கள்
7. அம்மியும் குழவியும்
8. கைவிளக்கு, கிளைவிளக்கு
9. அம்மையப்பர்

### ii மண நிகழ் முறை :

#### (அ) முற்பகுதி

1 மணமகன், மணமகளுக்கு நலங்கு
2 மண ஆடை படைத்தல்
3 மணஆடைக்கு அவையினர் வாழ்த்து
4 மண ஆடை வழங்கல்
5 அரசாணிக்கால் நடுதல்
6 மணப் பொங்கல்
7 காப்புக் கட்டல்
8 பெற்றோர் போற்றல்
9 ஓம்படை செய்தல்

#### (ஆ) நடுப்பகுதி

1 மணமக்கள் இறைவழிபாடு
2 மங்கல நாணுக்கு அவையினர் வாழ்த்து
3 அழல் ஓம்பல் I
4 மங்கல நாண் சூட்டல்
5 பட்டங்கட்டல்
6 மாலை மாற்றல்
7 வலம் வருதல்
8 அம்மி மிதித்தல்
9 பொரியிடல்

#### (இ) பிற்பகுதி :

1 உறுதி மொழியேற்றல்
2 அழல் ஓம்பல் II
3 காப்பவிழ்த்தல்
4 மாறியமர்தல்
5 அரிசி வாழ்த்து
6 பரிசுகள் (மொய் எழுதல்)
7 ஆலம் சுற்றல்
8 வலம் வருதல்
9 பாலும் பழமும்

II செய்முறை விளக்கம்

III மந்திரங்கள்

IV பலரும் பங்கு கொள்ள வாய்ப்பளிப்பது

V இன்றும் நிலவித் தமிழ் மரபு காப்பது

## திருமணச் செயல்கள்

i மணஅறை அமைப்பு :

1 மணப் பந்தர் :

வீட்டின் முற்றத்தில் நான்கு கால்களை நட்டு, கால்களுக்குத் தென்னை ஓலைகளைச் சுற்றி, வாழை மரங்கள் கட்டி, பந்தரின் நாலு பக்கமும் மாவிலைத் தோரணமும், பூச்சரங்களும் தொங்கவிட்டு ஒரு சோலை போன்ற இடத்தை அமைத்துக் கொள்வர். மாக்கோலங்கள், செம்மண் முதலிய போட்டு அழகு செய்வர்.

2 பந்தர்க் கால் :

தெய்வத்தின் துணையால் திருமணங்கள் கூடுவதால், அச்சோலையை ஒரு தெய்வச் சோலையாகக் கருதி. திருமணம் நடப்பதற்கு மூன்று நாளைக்கு முன்பே, தெய்வத்தை வழிபட்டு. ஐந்து வாழ்வாசியர் (சுமங்கிலிகள்) பந்தரின் ஒரு காலுக்கு, பால் முதலிய விட்டு திருமஞ்சனம் ஆட்டி அக்காலை மட்டும் பந்தரின் வடகிழக்கு மூலையில் நடுவர். பிறகே மற்றக் கால்களை பந்தர்க்காரன் நட்டு மணப் பந்தரை அமைப்பான். ஆயிரங்காலத்துப் பயிரான திருமணத்திற்கு அடிகோலுவது ஆதலின் கால் நடும் குழியில் நவமணிகள் இடுவர். நவதானியமும் பெய்வர்.

3 மணமனை :

பந்தரின் மேற்கு இரண்டு கால்களுக்கிடையே மணமக்கள் கிழக்கு நோக்கி அமர்வதற்கு, ஒரு நீள மணமனையை இடுவர். அம்மனையின் அடியில் சிறிது நெல் அல்லது அரிசி பெய்து வைப்பர்.

4 நிறை குடங்கள் :

மணமக்களுக்கு நேர் எதிரே, பந்தரின் கிழக்கு இரண்டு கால்களுக்கிடையே, தரையில டுமல் 'அணைத்து. அதன்மீது

இரண்டு புது மண் குடங்களில் நீர் நிறைத்து வைப்பர். குடங்களுக்கு மஞ்சளும் குங்குமமும் இட்டு, மங்கல வடிவாக்குவர்.

5 குடவிளக்கு :

பந்தரின் தென் கிழக்குக் காலையொட்டி, ஒரு மர உரலின் மீது ஒரு சிறு மண் குடத்தில் நீர் நிரப்பி, அதன்பேரில் அகன்ற அகலில் விளக்கேற்றி வைப்பர். இவ்விளக்கு அணையாதிருக்க அகலைச் சுற்றி இலை கட்டுவர். மரஉரல் குடம் அசையாதிருக்க. கல் உரலாயின் உறுத்துப்பட்டிருக்கும் உடையக் கூடும். எனவே மரத்தாலான உரல்.

6 முளைத்த கூலங்கள் (நவதானியம்)

ஒன்பது மண் கலசங்களில் முளைத்தநவதானியங் களை நிரப்பி, நிறை குடங்களுக்கு முன் பக்கம் வரிசையாக வைப்பர். பந்தக்கால் நடும் அன்றைக்கே, நவதானியங்களை நனைத்து முளைக்கப் போடுவர்.

7 அம்மியும் குழவியும் :

பந்தரின் வட கிழக்குக் காலையொட்டி, ஓர்அம்மி யும் குழவியும், அவற்றிற்கு மஞ்சள் குங்குமம் இட்டு, போட்டு வைப்பர்.

8 கை விளக்கு, கிளைவிளக்கு :

நிறை குடங்களின் முன்பு ஒரு தட்டில் கை விளக்கு ஏற்றி வைப்பர். இவ்விளக்கைக் காமாட்சியம்மன் விளக்கு என்று சொல்வதுண்டு.

நிறை குடங்களுக்கு பின்புறம் கிளை விளக்கு அழகு செய்யும்.

9 அம்மையப்பர் :

நிறை குடங்களுக்கு முன்புறம், முளைக் கலசங் களையொட்டி, இரு தலை வாழையிலையில் பச்சரிசி பெய்து, அதன்மீது இரு செம்புகளை அமைப்பர். மணம் செய்து வைக்கும் ஆசிரியர் செம்பு களில் முக்கால் பங்கு நீர்விட்டு, மாவிலை செருகி, நாரோடிருக்கும் தேங் காய் ஒவ்வொன்றை அவற்றின் மீது நிறுத்துவர். தேங்காய்களுக்கும், செம்புகளுக்கும் மஞ்சலிட்டுக் குங்குமம் வைப்பார். தேங்காய் மீது வெள்ளைப் பச்சை சிவப்புத் துணி துண்டுகளையும், பூச்சரத்தையும் மாலை களாக இடுவார். வெற்றிலைப்பாக்கு, பழம், மஞ்சட்கொம்பு இவற்றை முன்னே படைப்பார்.

[ இன்னும் வரும் ]

# மாந்த நோயும்-சிகிச்சையும்

Dr. P. பாலசுப்ரமணியம்.
சேலம்-2

மாந்தம் என்பது சாப்பிட்ட உணவு ஜீரணமாகாமலும், மேல் நோக்கி வாந்தியாகாமலும், கீழ்நோக்கி இறங்கி வெளிப்போகாமலும் இரைப்பையிலேயே தங்கி வயிறுஇரைதல், ஏப்பம் விடலாம் என்றமுயற்சி செய்யினும் ஏப்பம் வராமல் இரைப்பை கனத்து இருத்தல். வாந்தியும் வராமல் துன்பங்களோடு கூடிய இயல்புடையது இந்த மாந்த நோய் ஆகும் இதனை மந்தம் என்றும், அலசம் என்றும். அலசகம் என்றும் கூறுவார்கள்.

கோழி, மான், ஆடு முதலிய கறிவகைகள் மாவுப் பண்டங்கள், ஆட்டுப்பால சோறு முதலியவைகளை அளவுக்கு அதிகமாக உண்பதால் அவைகள் ஜீரணமாகாமல் வயிற்றில் தங்கி உதானவாயு கெட்டு நோயை வளர்க்கும். (அல்லது) தீயகுணங்கள் மிகுந்து வாயுவை தூண்டி நோயை உண்டாக்கும்.

## இதன் குறிகுணங்கள் :

இந்நோய்க்கு வாய் குமட்டல். வாயில் நீர்ஊறல், ஏப்பம்விடவிரும்பினும் ஏப்பம் வராமல் இருத்தல், வயிறு இரைந்து நோவுதல் வயிறு புரட்டல், தலைசுற்றல், நாவறட்சி, மிகுந்த நீர்வேட்கை முதலிய குறி குணங்களைக் காட்டும். மாந்தம் பலவகை உண்டு.

## ஐயமாந்தம் :

இதனை சீதக்கட்டு செரியாமை மாந்தம் எனவும், புளிப்பு மாந்தம் எனவும் கூறுவர். வறுமையில் உடலுக்கு வேண்டிய அளவு உணவு கொள்ளாதிருத்தல் அல்லது செரிப்புத் தன்மைக்கு (ஜீரண சக்திக்கு) மேற்பட்டு உண்ணல். இதனால் உணவு வயிற்றிலேயே தங்கி புளித்து மேல் நோக்கி வாந்தி வராமலும், வாயு வெளியேறாமல் வயிற்றை ஊதச் செய்து, வயிற்றுக்குள் புரட்டல், வயிற்று நோவுதல், மூச்சுவிட முடியாமல் நீர் ஊறல், மிகுந்த நீர் வேட்கை முதலியன உண்டாகும்.

## நஞ்சு மாந்தம் :

மிகுந்த நாட்பட்ட பழைய உணவுகளையோ, ஊசிப்போன பொருள் களையோ சாப்பிடுவதாலும், காளான் முதலிய பூஞ்சால பொருட்கள் புசிப்பதாலும் நஞ்சு மாந்தம் ஏற்படுகிறது. இவ்வாறு கெட்ட உணவு உட்கொண்ட சிறிது நேரமாயின் வாயில் ஒருவித சுவை உண்டாகி

வாயில் நீர் ஊறல், குமட்டல், வயிற்று வலி, மயக்கம் முதலியன உண்டாகும். சிலருக்கு வாந்தியையும், கழிச்சலையும் உண்டாக்கும். வயிற்றில் தாங்க முடியாத வலி, உடல் வியர்த்தலும் கையும், காலும் சில்லிடுதலும் முதலிய குறி குணங்கள் உண்டாகும்.

## மருத்துவம் :

ஓமமும், கற்பூரமும் ஓர் அளவாகக் கூட்டி தூள் செய்து அதில் ஒரு சிட்டிகை அளவு எடுத்து வெந்நீரில் சாப்பிட ஏப்பம் உண்டாகி வயிறு ஊதல் குறையும். குழந்தைகளாக இருப்பின் மேற்படி முறையையும் அல்லது ஓமம், சீரகம் உத்தாமணி இலை இவற்றை தூள் செய்து கொடுக்கலாம். பெரியவர்களுக்கு பிரண்டை, வடகம், பெருங்காய சூர்ணம், உப்பு செந்தூரம் முதலியன ஜீரணிக்கக் கூடிய மருந்துகள் ஏதேனும் ஒன்றை முறைப்படிக் கொடுக்கலாம்.

நோயின் வேகம் குறைந்தபின் நன்றாக மலம் கழிக்கக்கூடிய மெழுகு அல்லது தைலங்களைக் கொடுக்கலாம். அதாவது அகஸ்தியர் குழம்பு சித்தாதி எண்ணெய் இவற்றில் ஒன்றை நோயின் தன்மைக்கு தக்கபடி கூட்டியோ குறைந்தோ கொடுக்கலாம். வயிற்றுவலி நீங்கும் வரை எவ்வித உணவு வகையும் கொடுத்தல் கூடாது. அப்படி வேண்டுமாயின் சுத்த கஷாயம் சிறது அளவு கொடுக்கலாம். நோயின் வலி தீர்ந்தபின் எளிதில் ஜீரணமாகக்கூடிய நெற்பொறி கஞ்சி போன்ற உணவு இருமுறை வடித்து எடுத்த சோறும் ரசமும் கூட்டிக் கொடுக்கலாம். இரண்டு மூன்று நாட்கள் சென்றபின் காய்கறிகள் உணவுடன் சேர்த்து உண்ணலாம்.

## மாந்தம் நீங்க மேற்கூறிய மருந்துகள் சில முறை :

## "பெருங்காய சூரணம்"

சுக்கு, மிளகு, திப்பிலி, பெருங்காயம், சீரகம், ஓமம், இந்துப்பு, வாய்விளங்கம் வகைக்கு சம அளவு (25 கிராம் அளவு] எடுத்து, பெருங்காயத்தை நெய்யில் பொரித்துக் கொள்ளவும். மற்ற சரக்குகளை லேசாக வறுத்து எடுத்து எல்லாவற்றையும் சேர்த்து இடித்து சூரணம் செய்து கொள்ளவும்.

அளவு ; ½ அல்லது 1 டீஸ்பூன் அளவு எடுத்து வெந்நீர் அல்லது கடைந்த மோரில் சாப்பிட வாயு, மாந்தம், பசியின்மை, வயிற்றுவலி, அஜீரணத்தினால் ஏற்பட்ட கழிசசல் முதலிய நோய்கள் குணமாகும். (வாயு பதார்த்தங்கள் சாப்பிடக் கூடாது.)

## 2. சித்தாதி எண்ணெய்

(1) உத்தாமணிச் சாறு 1 லிட்டர், தேங்காய் பால் ½ லிட்டர், ஆமணக்கெண்ணெய் 1 லிட்டர், வெள்ளைப்பூண்டு 500 கிராம், கடுக்காய்த் தோல் 500 கிராம், சுத்தி செய்த நேர்வளம் 40 கிராம், பெருங்காயம்

5 கிராம், வெங்காயம் பொரித்தது 5 கிராம், சதுரக்கள்ளிபால் 5 கிராம், இந்துப்பு 5 கிராம், திப்பிலி 5 கிராம், கருஞ்சீரகம் 5 கிராம்.

## செய்முறை :

வெள்ளைப்பூண்டின் தோலை நீக்கி சுத்தம் செய்து அரைத்து அதன் சாறு எடுத்து வைக்கவும். கடுக்காயை 2 லிட்டர் தண்ணீரில் சேர்த்துக் காய்ச்சி 250 மி. லி ஆகச் சுண்ட வைத்த கஷாயத்தை வடித்து வைக்கவும் மற்ற சரக்குகளை பொடித்து வைக்கவும். பின்னர் எல்லா சரக்குகளையும் ஒன்று சேர்த்து கலந்து காய்ச்சி பதத்தில் வடித்து வைக்கவும்.

அளவு : 5 துளிகள் முதல் 15 துளிகள் வரை பால் அல்லது வெந்நீருடன் சாப்பிடவும்.

நோய்கள் : மாந்தம், வாயு, வாந்தி, குன்மம், சூதகவெட்டை, பொருமல், விக்கல், வலி, அரையாப்பு முதலியன குணமாகும்.

குறிப்பு : [இம்மருந்தை வைத்தியர்கள் மட்டும் முறைப்படி செய்தல் வேண்டும் ]

# அகில உலக அரங்கில்...

பேய், பிசாசு, ஆராய்ச்சி: அறிவியல் உலகமாக, அணுவெளி உலகமாக இவ்வுலகம் மாறி வருவதாகத் தான் நினைக்கிறோம்; மனிதன் விண்ணைத் தொட்டு, கண்ணுக் கெட்டாத உண்மைக் காட்சியைப் பிடிப்பதோடன்றி, மண்ணிலும் மண்ணிற்குள்ளும் மகத்தான அற்புதங்களை அறிவியல் துணைகொண்டு நிகழ்த்துவதாகத் தான் நினைக்கிறோம். அதே நேரத்தில் அமெரிக்கா வின்கோன்சின் பல்கலைக் கழகத்தில் மாந்தரீகத்தையும், பேய் பிசாசுகளை அறியும் கலையையும், சோதிட நூலையும் பாடப் பகுதியாக வைத்துள்ளதை கேட்கும்போது இவ்வுலகம் முன்னும் பின்னும் போகும் நிலைபெற்றதெனத் தெளிகிறோம்.

இன்றைய மாணவ உலகு உண்மைக் காட்சியிலிருந்து, மனித முயற்சிக்கு அப்பாற்பட்ட பொருள்களிலும் சிந்திக்கத் தலைப்பட்டுள்ளதால் கல்வி நிலையங்கள் அந்தப் பகுதிகளையும் பாடத் திட்டத்தில் சேர்க்க வேண்டியுள்ளதாக மேல் நாட்டறிஞர்கள் கருதுகின்றனர். எண்ணைக் கூட்டியறியும் சோதிடக் கலையையும், யோக முறைகளையும் மாணவ உலகு இன்று கற்கத் துடிப்பதாக அறிவிக்கிறார்கள். இன்றைய உலகப் போக்குக்கு இந்தபுதிய மாற்றம் எதிரிடையானது என்று கலிபோர்னியாப் பல்கலைக் கழகத்தில் பணிபுரியும் பேராசிரியர் ஐடன்குட்மேன் கருதுகிறார். இத்தகைய நிலை சமுதாயப் பிளவுக்கு அடிகோலுவதாகவும், தனி மனித முயற்சி தன் சக்தியை யிழப்பதாகவும் அறிஞர் உலகு கருத முற்பட்டுள்ளது. எது கல்வித் திட்டத்தில் இன்று தேவையானது என்பதல்ல பிரச்சனை; எதில் மாணவ உலகு ஈடுபடத் துடிக்கிறது என்பது தான் முக்கியமானது என்றுஒக்லாண்டு பலகலை கழகப் பேராசிரியர் கூறுகிறார்.

பேய், பிசாசு, குட்டித் தேவதைகளின் மேலிருக்கும் நம்பிக்கை குறைந்து வரும் இந்நாளில், அந்தத் துறையில் அமெரிக்கா ஆராய முற்பட்டுள்ளது விந்தையினும் விந்தை. மாந்திரீக முறையில் மூளைக் கோளாறுகளைத் தீர்க்க முடியுமென இன்று அமெரிக்கா கருத முன் வந்துள்ளது. விண்ணையும் மண்ணையும் தாண்டி ஆராய்ந்துவரும் மனிதன் தான் விண்ணையும் மண்ணையும் கீழ்நோக்கியிழுக்

கும் பேய், பிசாசு, சாத்தான், மாந்திரீகம், சோதிடம் போன்றவைகளையும் இன்று ஆராய முயன்று விட்டான்!

இப்பொழுது சொல்லுங்கள்—உலகம் எப்படிப்பட்டது அது உருண்டையானது மட்டுமல்ல; ஒரு நிலையானதும் அல்ல; முன்னும் பின்னும் போகும்-அது எடுப்பார்கைப்பிள்ளை!

2. பிணம் பிழைத்தது

உயிர் நீங்கிய பிணமென மருத்துவ உலகு அறிவித்த வுடன், அப்பிணத்தை இடுகாட்டுக்கோ, சுடுகாட்டுக்கோ அனுப்புகிறோம். சென்ற மாதம் லண்டன் மாநகரில் ரோஸ் ஹனோவர் யென்ற 85 வயது நிரம்பிய மூதாட்டி ஒருவர் இறந்து விட்டதாக மருத்துவ நிபுணர்கள் சான்றிதழ் அளித்து விட்டனர். அம்மூதாட்டியாரின் உற்றாரும் உற வினரும் கண்ணீர்சிந்தி கல்லறைக்கு வழியனுப்பி வைத் தனர். புதை குழிக்குக் கொண்டு போகும்போது அப் பிணம் குறட்டை விட்டதாம். அவ்வொலி கேட்டு திகைத் தவர்கள், அப்பிணத்தை மருத்துவ மனைக்கு எடுத்தேகினர் அங்கே அந்தப் பிணம் பிழைத்து எழுந்து அமர்ந்து, தான் இறந்து போன நாளை சிந்திக்கத் தலைப்பட்டதாம்! "இதை போன்ற நிகழ்ச்சி நிகழாமலில்லை" என அந்த மருத்துவமனை அதிகாரி கூறினராம். மனிதன் பிணமாவதும், பிணம் மனித னுவதும் உலகில் நிகழாமலில்லை!

3. புற்று நோய்

புற்று நோய்களில் பல வகையுண்டு—அவைகள் மனித உடலில் வளர்வதற்குரிய காரணங்களை மருத்துவ நூல் கூறு கிறது. அதிகமாக 'X-Ray'யென்னும் மருத்துவப் படப் பிடிப்பு காரணமாக மனித இனத்தில் அதிகமாக புற்றுநோய் வளர வாய்ப்பிருப்பதாக வாஷிங்டன் மருத்துவ அறிஞர் இர் வின் பிராஸ் கூறுகிறர். நூற்றுக்கு நாற்பது பேர்கள் இந்தக் காரணத்தால் புற்றுநோய் பெற்றுக் கவலை யுறுவதாகக் கணக் கிட்டிருக்கிறர்கள். இதை வைத்துப் பார்க்கும்போது ஆங் கில மருத்துவ முறையில் எது நல்லது, எது கெட்டது என்றே துணிய முடியவில்லை. நோய் தடுப்பு முறையும் சிறந்து அமைந்ததால தான், முடிவு நல்லதாக அமையும்; மக்களும் நம்பிக்கை வைப்பார்கள்—அது உயிரை வாழவைக்கும் உய ரிய பணியல்லவா?

நன்றி, அருட் பெருஞ்சோதி.

# அனுபவம் உணர்த்தும் உண்மை !

S. சிங்காரம்
JPT ஜொரான்டுட்
மலேசியா, 18–4–76

பேரன்பும் பெருமதிப்பிற்குரிய மூலிகை மன்னர் அவர்களுக்கு எனது இதயம் கனிந்த பணிவும் வணக்கமும்.

பல ஆண்டுகளாக கண்ணாடி அணிந்த நான் இப்போழுது ஓரளவு கண்ணாடி இன்றி உலவ முடிகிறது. தாங்கள் என் மகன் மூலம் அனுப்பிய நேத்திர பூண்டு தைலத்தின் அபார சக்திக்கு மேலும் வெற்றியும் தங்களுக்கு எனது மனமார்ந்த நன்றியும் மேலும் இரண்டு பாட்டல் தைலம் அனுப்பினால் மேலும் நன்மை அடைவேன் என்ற நம்பிக்கை உண்டு.

நீங்கள் மூலிகைகளின் குணாதிசயங்களை, மருத்துவ பயன்களை பற்றி எழுதி வருவது மக்களுக்கு பெருத்த செல்வத்தை கொடுத்தாற் போலுள்ளது. வல்லாரை, திப்பிலி, நெல்லி இளகல். குமரிநெய், போன்ற சில மருந்துகளை தயாரித்து குடும்பத்திலுள்ளவர்களுக்கும் நண்பர்களுக்கும் மற்றும் தெரிந்தவர்களுக்கும் கொடுத்து மிகுந்த நன்மை அடைந்திருக்கிறார்கள்.

இப்படிக்கு
சிங்காரம்

வே. சுப்பிரமணிய முதலியார்,
நெ. 13/1 சுபத்ரா இல்லம்
கீழ் சிந்தாமணி (P.O.)
திருச்சி-2

மகா ஸ்ரீ மூலிகைமணி ஆசிரியர் அவர்கட்கு திருச்சி வே. சுப்பிரமணிய முதலியார் எழுதிக் கொண்ட கடிதம்,
ஐயா,

தாங்கள் அனுப்பிய நேத்திரபூண்டு தைலத்தை உபயோகித்து வருகிறேன். இது நாள் இருந்து வந்ததற்கு தற்போது பேர்பாதி சுமாராக உள்ளது.

இங்ஙனம்
வே. சுப்பிரமணிய முதலியார்
26-3-76

# இதய ஒலி

P. N. K. ஜனார்த்தனராஜா், தேனி
21-4-76

மகா ள. ள. ஸ்ரீ கனம், ஆசிரியர் மூலிகைமணி அவர்களுக்கு, வந்தனம், உபயக்ஷேமம்.

இப்பவும் தங்களின் 16வது ஆண்டு சித்திரா பௌர்ணமி விழா வெள்ளிரத உற்சவம் அழைப்பு கிடைத்தது. மிக்க மகிழ்ச்சி. வர இயவில்லை மன்னிக்கவும். தங்களை நினைத்தே திருத்தணிகை சுவாமியின் அருள் எங்களுக்கு கிடைக்க வேண்டுகிறோம்.

P. N. K. ஜனார்த்தனராஜா்,
நெ. 3, பெரியகுளம் ரோடு,
தேனி.

கி. பொன்னுசாமி,
வடக்கு வெளி, சட்ட நாதபுரம் அஞ்சல்
சீர்காழி வட்டம்
தஞ்சை மாவட்டம்.

தமிழும், தமிழ் மருத்துவமும் செழித்தோங்க தங்களுக்கு எல்லா வித நலன்களும் அமையுமாறு எல்லாம் வல்ல முருகனை வேண்டிக் கொள்கிறேன்.

இப்படிக்கு
பொன்னுசாமி

சித்த மருத்துவத்தின் சீரழிவு கண்டழிந்த
சித்தம் தெளிந்ததினிச் சீர் பெற்றோம்—வித்தகராம்
வேலூர் மருத்துவ நூல் மெய்ப்புகழார் கண்ணப்பர்
பாலுனுவார் நோய்பறக்கும் பார்.

தோட்டத்துப் பச்சிலையால் துன்புறுநோய் பற்பலவும்
ஓட்டுநர்தாம் உண்மை உணர்ந்தாராய்-காட்டிடு சீர்க்
கண்ணப்பர் மூலிகைகள் கற்றுணர்த்து மாட்சியெலாம்
எண்ணுங்கால் இன்பம எமக்கு

துன்பம் விலகும் சுகம்பெருகும் எந்நாளும்
இன்பம் இயல்பாகும் எண்ணுயருப—நன்மருந்து
மூலிகைகள் நுட்பம் முழுதுணரும் கண்ணப்பர்
பாலுறுவோம் வப்மின் பரிந்து.

குருகுலக் கவிஞர், சி. து. கன்னுசாமி
கண்டரச்சேரி

## மூலிகைமணி ஆசிரியர் அவர்களிடம் நேரில் வந்து ஆலோசனை பெறவிரும்பும் அன்பர்கட்கு

சென்னையில் அனைத்து நாட்களிலும் சந்தித்து
மருத்துவ ஆலோசனையும் சிகிச்சையும் பெறலாம்.
காலை 9 மணி முதல் 12 மணி வரை
பகல் 3 மணி முதல் 5 மணி வரை
ஆலோசனைக் கட்டணம் உண்டு
தொலைபேசி : 445689

பஸ் ரூட் :

9, 10, 47, 47A திருமலைபிள்ளை ரோடில் மணியம்ஸ்டோர் ஸ்டாப்பிங்கில் இறங்கினால் இரண்டு நிமிடத்தில் மேற்கண்ட முகவரிக்கு வந்து விடலாம்.

கோடம்பாக்கம் ரயில் நிலையத்திலிருந்து ஹபிபுல்லா ரோடு வழியாக வரலாம்.

மற்ற பஸ் ரூட்கள் :

17, 17B, 17C, 17D, 11D, 25, 25B, 25C, 37, 37B, 37D, என்கிற பஸ்ஸில் ஏறி மாட்டு ஆஸ்பத்திரியில் இறங்கி வரலாம்.

ஆஸ்துமா, குன்மம், மேக நோய்கள், மூலம் கண் நோய்கள் போன்றவைகளுக்கு குறிப்பிடத்தக்க வகையில் மூலிகை சிகிச்சை அளிக்கப்படும்.

மருத்துவர் : ஆ. இரா. கண்ணப்பர், R.M.P.
7, அருளாம்பாள் தெரு, தி. நகர்
சென்னை-17—தொலைபேசி : 445689.

---

எமது மருந்துகளும் வெளியீடுகள், பழைய மூலிகைமணி இதழ்களும் கீழ்க்கண்ட இடங்களில் கிடைக்கும்.

**மூலிகைமணி**
7, அருளாம்பாள் வீதி,
தியாகராய நகர்
சென்னை - 600 017.

**மூலிகைமணி**
23, கிளப் ரோடு கிழக்கு
ஷெனாய் நகர்
சென்னை - 600 030.

---

வெளியிடுபவரும் ஆசிரியரும் ; வேலூர் மருத்துவர்
ஆ. இரா. கண்ணப்பர், R.M.P. 7, அருளாம்பாள் வீதி, தி. நகர்
சென்னை - 600 017, மூலிகை மணி அச்சகத்தில் அச்சிட்டவர் :
K. பாபு, D.M.E., சென்னை - 600 030.